# வாழ்வுப் பாதை

அ. மு. பரமசிவானந்தம், M.A., M. Litt.,
*துணைத் தமிழ்ப் பேராசிரியர்*
பச்சையப்பன் கல்லூரி, சென்னை-30.

தமிழ்க்கலைப் பதிப்பகம்
*தமிழ்க்கலை இல்லம்*
அமைந்தகரை, சென்னை-30.

## நூலுக்குள் செல்லுமுன்

வாழ்வுப் பாதை கரடு முரடானது. அப்பாதையில் நெறியில் மேடுபள்ளங்கள் நிரம்பியிருக்கும். காட்டைக் கடந்தும், மலையினைத் தாண்டியும் அப்பாதை வழியே செல்ல வேண்டியிருக்கும். அத்தனையும் கடந்து சென்றால் முடிவில் காண்பது இன்பபுரியோ அன்றித் துன்பக் கேணியோ என்பதும் சொல்ல முடியாது. இத்தனை இன்னல்களுக்கு இடையிலேதான் மனிதன் பன்னெடுங் காலமாகத் தன் வாழ்வைக் கழித்து வருகிறான்.

செல்லும் வழியில் சில விடத்தே பாதைகளில் நல்ல 'சிமிட்டி' பூசப்பட்டிருக்கின்றது. அதில் காரில் செல்லும்போது நம்மை மறந்து இன்பத்தில் ஆழ்ந்து விடுகிறோம். ஆனால் அதே வேளையில் – அந்த இன்ப ஓரையில்-அச்சிமிட்டித் தரையையே தன் வாழ்விடமாகக் கொண்டு, மண்ணே பாயலாய் விண்ணே கூரையாய் வெற்றுடலத்தோடு உறங்கும் அந்த ஏழையின் வரண்ட வாழ்வுப் பாதையைக் காணும்போது உள்ளத்தில் வேதனைதான் பிறக்கிறது.

ஆம். இன்றைய நாகரிக வாழ்வுப் பாதை அப்படித்தான் சொல்லுகிறது. புரை ஓடிய புண்ணை மூடி வைத்து மேலே பட்டால் அலங்கரிப்பது போன்று, மனிதர் உணவை மனிதர் பறிக்கும் வாழ்வுப் பாதைதான் இருபதாம் நூற்றாண்டின் இடையில் மக்கள் வகுக்கும் பாதை. புண்ணை அறுத்து மருந்திட்டுச் செப்பம் செய்ய வேண்டும். அதற்கு உள உரமும் எதுவரினும் அஞ்சா உணர்வும் பெற்ற நல்லவர்கள் தேவை.

உலகத் தாபனங்களும், நாட்டு அரசாங்கங்களும் அத்தகைய நல்லவர்களிடம் ஒப்படைக்கப்படுமாயின் வாழ்வுப் பாதை ஒருவேளை செம்மைப் படலாம். ஆனால் எப்போது ஒப்படைக்கப்படும்? யார் அறிவார்?

உலக வாழ்வைச் செம்மையாக்க முற்படுபவர் எவரும் தம் வீட்டு வாழ்வையும் தனி வாழ்வையும் முதலில் செம்மைப்படுத்திக் கொள்ளவேண்டும். அன்றேல் அவர்கள் உலகுக்கு வகுக்கும் வாழ்வுப் பாதை வரண்ட பாதையாகவே முடியும்.

ஆம். எல்லாரும் இன்புற்றிருக்க நினைக்கும் இனிய உள்ளமே நல்ல வாழ்வுப் பாதைக்கு வழிகாட்டியாக விளங்கமுடியும். அந்த இனிய உள்ளம் முகிழ்க்க இவ்'வாழ்வுப் பாதை' வழிகாட்டியாக அமையும் என எண்ணுகிறேன்.

சென்னை-30
10—3—60

**அ. மு. பரமசிவானந்தம்**

# உள்ளே